*Taṉavaiciya ūḻiyaṉ*

*Malar 3, itaḻ 49*

*August 24, 1923*

Record no. 148

உ

சிவமயம்.

சென்னை பதிவு எண் கஙுஎ.

தந்திவிலாசம்:—"Oெlla"

# தனவைசிய ஊழியன்

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்றும்
வெள்ளி தோறும் வெளிவருவது.

ஆசிரியன்:— ராய. சொக்கலிங்கம்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

ஊழையும் உப்பக்கம் காணபர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்

மலர் ங. காரைக்குடி ருத்ரோத்காரி வூல ஆவணி மீ அ௳ (உ௯ - அ - ௧௯உ௩) இதழ் ௯.

## தமிழ் நாட்டுத் தேசியக்காரிய கூட்டம்

க. திருச்சியில் சென்ற ஜூலை உ0, உக-ந் தேதிகளிலும், உச-ந் தேதியிலும் கூடிய காரியக்கூட்டங்களின் நடவடிக்கைகள் படிக்கப்பட்டு அங்கீகரிக்கப்பட்டன.

உ. ஜூலைமாதத்து வரவுசெலவுக் கணக்குகள் அங்கீகரிக்கப்பட்டன. நாளிது தேதி வரையில் தற்செயலான செலவுக்கணக்கு படிக்கப்பட்டு அங்கீகரிக்கப்பட்டது.

ங. அகில இந்திய கூட்ட அங்கத்தினர்களுக்குக் கூட்டங்களுக்குப் போய்வரக் கூடிய வரையில் குறுக்கான பாதைக்கு மூன்றாவது வகுப்பு புகைரதக் கட்டணம் கொடுத்து வரவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

ச. பின் வரும் கணக்குச்சீட்டுகள் அனுமதி செய்யப்பட்டன.

| | | | |
|---|---|---|---|
| க. ஸ்ரீமான் சத்தியமூர்த்தி அய்யர் (அகில இந்தியக் கூட்டத்திற்கு நாகபுரி போய் வர) | ௬௩ | அ | 0 |
| உ. ஈ. வி. ராமசாமி நாயக்கர் (பிரயாணச் செலவு) | ௫ | ௧௩ | 0 |
| ங. எம். ஸி. வாஸுதேவையா (ஹிந்து முஸ்லிமான் ஒற்றுமைக்காக பிரயாணச் செலவு | ௬ | 0 | 0 |
| ச. ஷோலிங்கர் தேவராஜய்யர் (ருவத்துநாகபுரித் தொண்டர் தொகுதி உருப்படம் எடுக்க) | ௧௪ | ௬ | 0 |
| ரு. சென்னை வெங்கடேசுவர் சாலை (குண்டூசிகள்) | ௬ | ௧0 | 0 |

ரு. பின்கண்ட விதிகளை அனுசரித்து விசேஷ தேசியசபைக்குப் பிரதிகாரியஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

க. ஜில்லாக் காரியதரிசிகள் அந்தந்தஜில்லாவிற் கேற்பட்டிருக்கும் பிரதிகாரியஸ்தர்களின் தொகையைஜில்லாவிலுள்ள தாலூக்காக்களினிடையே பிரித்து அந்தந்தத் தாலூகாவிலிருந்து எவ்வளவு பிரதிகாரியஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்று தாலூகாச் சபைகளுக்கு இம்மாதம் கரு-ந் தேதிக்குள் தெரிவித்துவிடவேண்டியது.

உ. டெல்லி விசேஷ தேசிய சபைக்குப் பிரதிகாரியஸ்தர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட விருப்பமுடையவர் அனைவரும் தாலூகாச் சபைக்காரியஸ்தர்களுக்கும் தாலூகாச்சபை இல்லாத இடங்களில் ஜில்லா சபைக்காரியதரிசிகளுக்கும் ஆகஸ்டு உ0-உக்குள் மனுச்செய்து கொள்ள வேண்டியது. விண்ணப்பங்கள் எழுத்துமூலமானவையாயும் பின் கண்ட விபரங்கள் அடங்கினவையாயும் இருக்க வேண்டும்.

அ. பெயரும் முழுவிலாசமும்.

ஆ. வயது.

இ. அபேக்ஷகர் தேசிய இலக்ஷியத்தில் கையெழுத்திட்டு, இவ்வருஷசந்தா நான்கு அணசெலுத்திய அசல் சபையின் பெயர்.

ஈ. எந்த ஜில்லா, தாலூகாவிற்கு அவர் அபேக்ஷகராக இருக்கிறார் என்பது.

ங. ஒவ்வொரு அபேக்ஷகரும் தம்முடைய மனுவுடன் ஒரு ரூபாய் கட்டணம் அனுப்ப வேண்டும். தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் விஷயத்தில் இந்தப் பணம் டில்லியில் திருப்பிக் கொடுக்கப்படும்.

ச. எந்தத்தாலூகாவிலோ அல்லது தேர்தல்தொகுதியிலோ அதற்குரிய ஸ்தானங்களின் தொகைக்குச் சரியாகவோ குறைவாகவோ விண்ணப்பங்கள் வந்திருந்தால் அந்த அபேக்ஷகர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாவார்கள். அவர்களுடைய பெயர்களும் கட்டணப்பணமும் மாகாணக் காரியாலயத்துக்கு அனுப்பப்படும்.

ரு. ஏற்பட்ட ஸ்தானங்களுக்கு அதிகமாக விண்ணப்பங்கள் இருந்தால் தாலூகா அல்லது ஜில்லாக் காரியதரிசிகள் தபால் மூலமாகவோ அல்லது வேறு ஆள்மூலமாகவோ அபேக்ஷகர்களுடைய பெயர்களை அசல் சபைகளுக்கு அனுப்பவேண்டும். பெரும்பான்மை அசல் சபைகளால் அங்கீகரிக்கப் படுபவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாவார்கள்.

௬. தேர்ந்தெடுக்கப்பட்ட எல்லா அபேக்ஷகர்களுடைய பெயர்களையும் கட்டணப் பணத்துடன் ஆகஸ்டுமீ உஎ-உக்குள் மாகாணக் கூட்டக் காரியாலயத்துக்கு அனுப்பிவிட வேண்டும். மாகாணக் காரியதரிசிகள் ஜில்லாக்களி லிருந்துவரும் ஜாபிதாக்களை ஒன்று சேர்த்து டெல்லி வரவேற்புக் கூட்டத்துக்கு உடனுக்குடன் தபாலில் அனுப்பி விடுவார்கள்.

எ. தேர்ந்தெடுக்கப்படாத அபேக்ஷகர்களுடைய பெயர்களையுங்கூட அதே தேதிக்குள் விண்ணப்பக் கட்டணங்களுடன் மாகா

ணைக் காரியாலயத்துக்கு அனுப்பி விட வேண்டியது.

௪. சேலத்தில் மாகாண மகாநாடு கூட்டுங் காலத்தில் நடைபெறப்போகிற தமிழ்நாட்டுத்தேசியசபைக் கூட்டத்தின் பொதுக்கூட்டத்தில் தேர்தல் விஷயமான எல்லாத் தகரார்களும் தீர்க்கப்படும். கூட்டத்தார் இஷ்டப்பட்டால் பிரதிகாரியஸ்தர் ஸ்தானங்களில் காலியாயிருப்பவைகளைப் பூர்த்தி செய்வார்கள். மேற்படிக் கூட்டத்தில் தேர்தல் விஷயமாகச் செய்யப்படும் மாறுதல்களை வரவேற்புக் கூட்டத்தாருக்குத் தந்திமூலம் அறிவிக்கப்படும்.

௫. ஸ்திரீ பிரதிகாரியஸ்தர்களும் ஒதுக்கப்பட்ட வகுப்பினரைச் சேர்ந்தபிரதிகாரியஸ்தர்களும்போதுமான தொகையில் தேர்ந்தெடுக்கப்பட்டுச் செல்வதற்கு வேண்டிய முயற்சிகள் எடுத்துக் கொள்ளுமாறு ஜில்லா தேசிய சபைகளை இச் சபையார் வேண்டிக்கொள்ளுகின்றனர்.

௬. ஸ்ரீமான் திரு. வி. கல்யாணசுந்தர முதலியார் அவர்களை வைத்யர் வரதராஜுலு நாயுடு அவர்களின் ஸ்தானத்தில் உப அக்கிராசனராகத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

௭. ஸ்ரீமான் கஸ்தூரிரெங்கய்யங்கார் அவர்களின் கணக்குப் பிரகாரம் தென்னாற்காடு ஜில்லா திலகர் சுயராஜ்ய நிதி வசூலில் திண்டிவனம் தேசியப் பாடசாலைக்குப் பிரத்யேகப்படுத்தி வைத்திருக்கும் ரூபாய் ௮௦௩-யும் ஜில்லாக் கூட்டத்தாருக்குத் திருப்பிக் கொடுக்கவேண்டியதென்று தீர்மானிக்கப்பட்டது.

௮. கல்லிடைக்குறிச்சி திலகர் வித்யாலயத்தின் தலைமை உபாத்தியாயர் ௧௨-௫-௨௩-ல் எழுதிய கடிதமும் அதில் ௧௩-௫-௨௩ தேதியிட்டு ஜில்லாக் கூட்டக் காரியதரிசி செய்த சிபார்சும் படிக்கப்பட்டது. திருநெல்வேலி ஜில்லா தேசிய சபையாருக்கும் மாகாண சபையாருக்கு முள்ள பற்று வரவுகளை ஒழுங்குபடுத்தி முடிவுசெய்யும் வரையில் இந்த விஷயம் ஒத்தி வைக்கப்பட்டது.

௯. தூத்துக்குடி தேசியசபை நிர்வாகஸ்தர் இருவரிடமிருந்து வெண்ணிலைப் பத்திரம் வாங்கிக்கொண்டு சுதேசி அபிவிர்த்திக்காக ௫௦ ரூபாய் கடன் கொடுக்கத் தீர்மானிக்கப்பட்டது.

௧௦. சென்னை ஜில்லாத் தேசிய சபைக்குப் பொதுச் செலவுக்காக மாதம் ரூ. ௧௫௦ கொடுத்து வரத்தீர்மானிக்கப்பட்டது.

௧௧. மாகாணத் தேசிய சபையின் பொதுக்கூட்டம் சேலத்தில் மாகாணமகாநாடு நடக்கும் சமயத்தில் செப்டம்பர் ௨, ௩-தேதிகளில் கூட்ட வேண்டியதென்று தீர்மானிக்கப்பட்டது.

௧௨. காரியதரிசிகள் மாகாணக் கூட்ட விதிகளுக்கு நகல் திருத்தப் பிரேரணைகள் தயார் செய்து அச்சடித்து மாகாணக்கூட்ட அங்கத்தினர்களுக்கு அனுப்பி வைக்க வேண்டியது.

௧௩. சென்னை சுயராஜ்யா அச்சியந்திரப் பிரசுரக்கூடம் (அளவுள்ளது.) காரியஸ்தரிடமிருந்து வந்த ஆகஸ்டு ௧-உயிட்ட கடிதம் படிக்கப்பட்டது. அந்தக் கடிதத்தின் பிரகாரம் கடிதங்களும் எழுத்துக்களும் கொடுக்கப்பட்டால் பெற்றுக்கொள்ள ஸ்ரீஜத் ராமநாதனுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது.

௧௪. அவசியமாயின் அடுத்த தமிழ்நாட்டுத் தேசிய சபைப் பொதுக்கூட்டத்திலும், மாகாண மகாநாட்டிலும் ஆலோசனைக்கு வைப்பதற்காகக் காரியதரிசிகள் இவ்விஷயத்தைப்பற்றி ஓர் அறிக்கை தயார் செய்து அனுப்பவேண்டியதென்று தீர்மானிக்கப்பட்டது.

௧௫. ஸ்ரீமான்கள் கஸ்தூரி ரெங்கய்யங்கார், கோபாலசாமி முதலியார் இவர்கள் வசம் தற்காலம் இருந்துவரும் தமிழ்நாட்டுத் தேசிய சபையின் பணத்திற்குச் சென்னை நகரில் கட்டடமோ மனையோ வாங்குவதற்காகப் பேசி ஏற்பாடு செய்ய ஸ்ரீமான் ராமநாதனுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

௧௬. அகில இந்தியக் கூட்டத் தீர்மானத்தின் பிரகாரம் கெயா முடிவு விஷயமாக நாடெங்கும் [illegible] வேலை நிறுத்தம் செய்யுமாறு மாகாண மகாஜனங்களை இக்கூட்டத்தார் வேண்டிக்கொள்கின்றனர். இதற்கு வேண்டிய துண்டுப் பிரசுரங்கள் அவர் விளம்பரங்கள் முதலியவைகள் அச்சிடுவதற்குக் காரியதரிசிகளுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதற்கு வேண்டிய முயற்சிகள் எடுத்துக்கொள்ளுமாறு ஜில்லாக் கூட்டங்களையும் கேட்டுக்கொள்ளுகிறது.

௧௭. ஜில்லா தேசியக் கூட்டங்கள் தங்கள் கணக்குகளைப் பிரதி வருஷமும் ஆகஸ்டு௴ ௩௧-உ யோடு முடித்து செப்டம்பர் ௩௦-உக்குள் வருஷாந்தர அறிக்கை அனுப்பிவிட வேண்டும். தாலூகாசபைகளும தங்கள் கணக்குகளை ஆகஸ்டு௴ ௩௧-உ யோடு முடித்து செப்டம்பர்௴ ௧௫-உ-க்குள் ஜில்லாக் கமிட்டியின் வருஷாந்தர அறிக்கையில் தாலூகாக் கூட்ட அறிக்கைகளின் சுருக்கம் சேர்க்கப்பட வேண்டும்.

௧௮. ௧௯௨௩-ஹு செப்டம்பர்௴ ௧-உயி லிருந்து ஆரம்பமாகும் வருஷத்திற்கு எல்லா ஜில்லாக் கமிட்டிகளுக்கும் ஒரே மாதிரியான கணக்குப் புத்தகங்கள் வாங்கிக்கொடுக்கக் காரியதரிசிகளுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது,

திருச்சினாப்பள்ளி,
௧௩-௮-௧௯௨௩

க. சந்தானம்.
காரியதரிசி.

## கொழும்பு.

இவ்வூரில் ஆடி வேல் உத்ஸவம் கழிந்தவுடன் இடும்பன் பூஜை வெள்ளவத்தையில் வெகுநாளாக நடந்துவருகிறது. ௧௦, ௧௫ ஆடு கோழிகளை வெட்டிப் பூஜைபோடுவது வழக்கம். நம் நகரத்தார்கள் அநேகர்க்கு இதுவிஷயம் திருப்தியில்லை. இவ்வருஷம் பழைய கதிரேசன் கோவில் ஆடிவேல் உத்ஸவம் கழிந்ததும், மேற்படி ஆடிவேல் உத்ஸவத்திற் சேர்ந்த உண்டியல் காசுகளை யெண்ணிக் கோவில் விசாரணைதாரரிடம் கொடுப்பதற்காக நேற்று சாயந்திரம் பழைய கதிரேசன் கோவில் நகரத்தார் எல்லோரும் கூடியிருந்தார்கள். அச்சமயத்தில், இவ்வருஷம் இடும்பன் பூஜையை நிறுத்தவேண்டுமென்று சிலர்சொன்னார்கள். மற்றவர்களும், நிறுத்துவது நிரம்ப நல்ல காரியந்தானென்றும், இது வெகு நாட்களாய் நடந்துவருவதால், சுவாமிக்கு முன் சீட்டெழுதி வைத்துப்பார்த்துச் செய்தால் நல்லதென்றும் சொன்னார்கள். அப்படியே எல்லோரும் ஒப்புக்கொண்டு வழக்கம்போல் நடத்திவருகிறதாவென்று ஒரு சீட்டும், ஒரு கோழியும் ஒரு கிடாயும் மட்டிலும் பலி கொடுக்கிறதாவென்று ஒரு சீட்டும் எழுதி, சுவாமி முன்பாக வைத்துத் தீபாராதனை பார்த்துச் சீட்டைபெடுத்துப் பார்த்தார்கள். அதில் ஒரு கோழியும் ஒரு கிடாயும் பலி கொடுக்கும்படியிருந்தது. நகரத்தார் எல்லோரும் மிக்க சந்தோஷத்துடன், இதுபோல் நடத்துவதாகத் தீர்மானம் செய்துகொண்டார்கள். இதைப்போல் புதுக்கதிரேசன் கோவில் நகரத்தார்களும் செய்துவருமாறு நம் குலகுருவாகிய முருகக் கடவுளைப்பிரார்த்திக்கிறேன்.

கு. ம. நா. நா. சா.
கருப்பன் செட்டியார்.



## வியாபாரமும் கைத்தொழிலும்.

ஒரு தேசமானது தன்னிலையினின்றும் முன்னேற்றமடைய வேண்டுமானால், அங்கு வியாபாரமும் கைத்தொழிலும் அபிவிர்த்தியடைந்திருக்க வேண்டுவது அவசியம். முற்காலத்தில் அதாவது மற்ற தேசங்கள் அநாகரிக மென்னும் சேற்றில் ஆழ்ந்துகிடந்த காலை, நம் தாய்த் திருநாடு முற்கூறிய இருதுறைகளிலும் மேன்மைபெற்று விளங்கியதாக இன்றும் நமது பூர்வ சரித்திரங்களால் அறியக்கிடக்கின்றது. அவைகளெல்லாம் இப்போது எங்கோ மறைந்துபோகப் புது நாகரீகம் என்னும் டம்பக் குழி வாய்ப்பட்ட இந்தியச் செல்வர்கள், மேல்நாட்டினரைப்போல் கைத்தொழில் வியாபாரம் ஆகிய வற்றை விர்த்திசெய்ய முற்படாது, அழிந்துபோகும் தன்மை வாய்ந்த அவர்களது நடையுடை பாவனைகளில் மயங்கிக் காலத்தை வீணே கொலைபுரிகின்றனர்.

ஊக்க மிக்கவர்களாய் ஏதேனும் ஓர் தொழிலைப்பற்றித் தங்கள் பொருளைப் போட்டால் பெருத்த நஷ்டம் நேரிடுமோ என்னவோ? என்பபயந்தவர்களாய் நிலங்களைச் சேர்ப்பதிலும் அதிக வட்டிக்கு ஆசைப்பட்டுக் கடன் கொடுப்பதிலுமே தங்கள் பணங்களையெல்லாம் உபயோகின்றனர். மேல்நாட்டில் கைத்தொழிற் சாலைகள் பெருகி வருவதைப்போல நம் நாட்டிலும் ஆங்காங்குவட்டித்தொழில் நடத்தும் நாணயசாலைகள் பெருகி வருகின்றன. இவர்களது பேடித்தனத்தையும் முயற்சியின்மையையும் கண்ட அந்நிய நாட்டார் ஒவ்வொன்றாய் நமது கைத்தொழில்களையும் வியாபாரத்தையும் கைப்பற்றிக்கொண்டு, இப்போது சகல விதமான வஸ்துக்களுக்கும் (முக்கியமாய் தான்ய வகைகளைத் தவிர) நாம் அவர்களை எதிர்பார்க்கும்படியான நிலைமையில் விட்டுவிட்டனர்.

நம் நாட்டிலேயே நம் ஏழை இந்தியச் சகோதரர்களின் பெரும் உழைப்பில் விளைவிக்கப்பட்ட பருத்தியை அவ்வந்நிய நாட்டார் நம்மிடமே சொற்ப விலைக்கு வாங்கிக்கொண்டுபோய், அதை ஆடைகளாக நெய்து கொண்டு வந்து நம்மிடமே அதிக விலைக்கு விற்றுக் கோடிக்கணக்கான பொருள்களைக் கொள்ளை கொண்டு செல்ல, நாம் ஏமாந்த சோணகிரிகளாய் உப்பு முதல் கற்பூரம் வரை சகல பொருள்களுக்கும் அவர்களை எதிர்பார்த்துக் கொட்டாவி விட்டுக் கொண்டிருக்கின்றோம். ஏதேனும் காரணம்பற்றி நாம் கோரும் பொருள்கள் அந்நிய நாட்டினின்றும் வரத்தடைபடுமேயானால், நமது கதி என்னாகுமென்பதை யாரறிவார்?

நமது நாட்டில் பிழைப்பதற்கு வழியின்றி எத்தனை ஏழை இந்தியர்கள், மலாய்நாடு பிஜித்தீவு நேட்டால் முதலிய அயல் பிரதேசங்களுக்குச் சென்று, அங்குள்ள வெள்ளையர்க் கடிமைப்பட்டுழைக்கின்றனர். அவர்கள் அங்குப்படும் கொடிய துன்பங்களைப்பற்றி எத்தனை பத்திரிகைகள் கூக்குரலிடுகின்றன. அதைக் கவனிப்பவர் யார்? உண்பதிலும் உடுப்பதிலும் தங்கள் காலத்தை வீணே கழிக்கும் தனவந்தர்கள் ஏன் துணிந்து அவர்களைக் காப்பாற்ற முற்படக்கூடாது?

அயல் நாடு சென்றும் அரை வயிறு ஆகாரங்கூடக் கிட்டாது அவஸ்தைப்படும் அவர்களுக்கு நம் நாட்டிலேயே பல கைத்தொழிற் சாலைகளை ஸ்தாபித்து அவற்றில் வேலை கொடுத்துதவுவோமானால், அதனால் அவர்கள் சஞ்சலமற்ற வாழ்க்கை காணவும் நாம் தக்க ஊதியத்தை யடையவும் ஏதுவுண்டாமல்லவா?

இந்தியச் செல்வர்களே!

மேல் நாடும் ஜப்பானும் கீர்த்தி பெற்றது எதனால்? கைத்தொழிலாலும் வியாபாரத்தாலும் மன்றோ? அவர்களைப்போல் செல்வமும் கீர்த்தியும் பெற நீங்கள் ஏன் முயற்சி செய்யக்கூடாது? போலி டம்பமாகிய மேல்நாட்டார் நடையுடை பாவனைகளாலும் நம்மை ஏமாற்றுவதற்காக அவர்களால் கொடுக்கப் பெறும் வெறும் எழுத்துப் பட்டங்களாலும் நம் தாய்நாடு சிறப்புறாதென்பதை ஒவ்வொருவரும் சிந்தையிற் கொண்டு கைத்தொழில் வியாபாரம் ஆகிய இரு துறைகளையும் விர்த்தி செய்யப் பாடுபடுங்கள். நமது நாட்டிலேயே வளர்ந்து அந்நியநாடு சென்று அந்நியர்கட் கடிமைப்பட்டுழைக்கும் ஏழைத் தொழிலாளர்களை அன்புடன் காப்பாற்றுங்கள்.

உடைக்கு மூலவஸ்துவான பஞ்சை நாமே உற்பத்தி செய்து அந்நியர்க்களித்து, அவற்றால் செய்யப்பட்ட உடைகளுக்கு அவ்வந்நியரை எதிர் பார்ப்பது எத்தகைய வெட்கக் கேடான விஷயம்? உலக சிரேஷ்டராகிய மகாத்மா சிறை செல்லும் பொழுது நமக்கு அறிவித்தது என்ன? "கதர்" என்ற மகிமை பொருந்திய திருமந்திரத்தை யன்றோ பல்காலும் நமக்கு அவர் உபதேசித்தார்? அப்பெரியாரின் திருவாணையை நிறைவேற்றவேண்டியகடமை, இந்தியாவிற் பிறந்த ஒவ்வொருவருக்கும் ஏற்பட்ட முக்ய கடமையாமென்பதை மனத்துட்கொண்டு யாவரும் அவ்விஷயத்தில் ஒற்றுமையுடையவர்களாய் எங்கும் கதரின் பெருமை ஜ்வலிக்கச் செய்ய முற்படுவீர்களாக! ஏழைத்தொழிலாளர் வாழ்க!! பாரதமாதா திருவருள் பெறுக!!!

நல்லகருப்பன்.

## மதிப்புரை.

பாலர் மித்திரன்:—இது கொழும்பு ஸரஸ்வதி புத்தகசாலைச் சங்கத்தாரால் மும்மாதத்துக் கொருமுறையாக வெளிப்படுத்தப் பெறுகிற புஸ்தக ஸஞ்சிகையின் முதற் பகுதி. இப்பகுதி ௭௨-பக்கங்களுடையது. புஸ்தகம் சிறிய அளவுடைய தாயினும் அரிய பெரிய உரிய விஷயங்களை யுட்கொண்டுள்ளது. இதில் ௪-அநுபந்தங்களும் சேர்க்கப்பட்டு, முதல் அநுபந்தத்தில் பல பெரியார்களது வாசகங்களின் திரட்டும், இரண்டாம் அநுபந்தத்தில்செய்யுட்டிரட்டும், மூன்றாவது அநுபந்தத்தில் பூர்வகதையொன்றும், நான்காவது அநுபந்தத்தில் விளம்பரங்களும் குறிக்கப்பட்டிருக்கின்றன. இதன் வருஷசந்தா ரூ. ௧-௦-௦. வேண்டுவோர் "ஸரஸ்வதி புத்தகசாலை, ௧௯௭-செட்டித்தெரு, கொழும்பு" என்னும் விலாசத்துக்கு எழுதிப் பெறுக.

# பிறநாட்டுச் செய்தி.

பாரிஸில் பெண்கள் இயந்திர (மோட்டார்)வண்டிகளை வாடகைக்கு ஓட்ட ஆரம்பித்துள்ளார்கள்.

* * *

முஸல்மான்களின் யாத்திரை ஸ்தலமாகியமெக்காவுக்கு ஸ்ரீமான் ஹெட்லி என்னும் ஆங்கிலப் பிரபு யாத்திரை சென்று திரும்பினர்.

* * *

குற்றவாளிக்குக் கொடுத்தால், ஒளியாமல் உள்ளத்தை யுள்ளபடி சொல்லும்படியான மருந்தொன்றை ஒரு அமெரிக்க வைத்யர்கண்டு பிடித்திருக்கிறார்.

* * *

பிரஷ்யாவிலுள்ள லெயிட்ஸ் என்னுமிடத்தில் உள்ள சிறையிற் புகுந்து சிலர் அங்குள்ள கதவுகளை யுடைத்துக் கைதிகள் எல்லாரையும் விடுதலை செய்துவிட்டார்கள்.

* * *

ஜர்மனியில் பணமுடையினாலும் உணவுப் பொருள்களின் குறைவினாலும் கைத்தொழிற் சுருக்கத்தாலும் ஏழைகள் மிகவும் கஷ்டப்படுகின்றார்கள்.

* * *

பிரான்ஸு அரசாங்கம் ஆங்கில அரசாங்கத்துக்குச்சென்ற மார்ச்சு ௩௧௨ வரை கொடுக்க வேண்டிய கடன்தொகை பவுன் ௯௧0,000,000 ஆகும்.

* * *

இங்கிலாந்து வருஷமொன்றுக்குக் கொடிகள் அதிகாரிகள் விஷயமாகச் செய்யும் குண்டு மரியாதைகட்காக ௨௪,000 பவுன் செலவு செய்கின்றது.

* * *

கிரேக்க தேசத்துப் பிரஜைகள் குடியரசு இயக்கத்தை யாரம்பித்திருக்கிறார்கள். ஒருகோடீச்வரர் பொருளுதவிசெய்ய முன்வந்திருக்கிறார்.

* * *

கையுறைகளிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய மின்ஸார விளக்குகள் தற்போது உபயோகத்துக்கு வந்திருக்கின்றனவாம். இவை ஊர்க்காவற் கூட்டத்தாருக்கு மிகவும் உதவியாயிருக்கும்.

* * *

துருக்கி ஸமாதான உடன்படிக்கையில் துருக்கிக்கு ஸாதகமாக இருந்தமைக்காகத் தமது நன்றியை இந்தியா ராஜப்பிரதிநிதிக்குத் துருக்கி சுல்தான் தந்தி மூலம் தெரிவிக்கிறார்.

* * *

பதின்மூன்று மாதகாலம் அரசாங்கத்துக்கு அகப்படாமல் குடியரசுப் பிரசாரத்தை நடத்திக் கொண்டு வந்த ஐரிஷ்த்தலைவரான ஸ்ரீமான் தீவேலரா சில நன்றிகெட்ட ஐரிஷ்க்காரர்களாலேயே கைது செய்யப்பட்டார்.

* * *

எகிப்து மாதர் தமது சுதந்தரத்துக்காகச் செய்யும் போராட்டத்தில், துருக்கிய மாதர்போல முகமூடியை வாங்கிக்கொள்ளவும்கல்வி வாக்குரிமை முதலிய சீர்திருத்தங்கள் வேண்டுமென்றும்விரும்புகின்றார்களாம்.

* * *

பிரான்ஸில் சென்ற ௫0-ஆண்டுகளாகப் பிரஜா உற்பத்தி குறைவுபட்டு ஜனத்தொகை அருகி வருவதால், அதனைப் பெருக்க வேண்டிய முயற்சி யெடுத்துக் கொள்ளும் முறையை யாலோசித்து வருகிறார்கள்.

* * *

சமீபத்திற் காலஞ்சென்ற ஹார்டிங்குக்குப் பின்னர் ஸ்ரீமான் கூலிட்ஜ் அமெரிக்கத் தலைவராக நியமிக்கப்பட்டிருக்கின்றார். ஏற்கனவே இருந்த எல்லா மந்திரி சபை யுத்தியோகஸ்தர்களும் தங்கள் பதவிகளை ஏற்றுக்கொண்டார்கள்.

* * *

பிரான்ஸில், லூர்தே என்னுமிடத்திற்கு யாத்திரையாக இயந்திர வண்டியிற் சென்ற ௨௩-டச்சுக்காரர்கள் வழியில் விளையாடிக் கொண்டிருந்த குழந்தைக்காக வண்டியை விலக்கிபோட்ட, அருகில் வேகமாயோடும் சிற்றாற்றில் வீழ்ந்து அனைவரும் மாண்டனர்.

* * *

கெனியா முடிவைப்பற்றிக் கோபங்கொண்டு ஜப்பான் பத்திரிகைகள் வெள்ளையரது இறுமாப்பைக் கண்டிப்பதுடன் நில்லாமல், இந்தியா உலகெங்கும் சம அந்தஸ்து வகிக்கச் செய்துவரும் போராட்டத்தில் இயன்ற உதவி செய்வதாகவும் வாக்குறுதி யளிக்கின்றன.

* * *

லார்டு ஆல்ப்ரட் டக்ளஸ் "மார்னிங் போஸ்ட்" பத்திரிகை மீது தொடுத்திருந்த மானநஷ்ட தாவாவில், அறம் வழங்கு கழகத்தார் பத்திரிகைமீது ஒரு பார்த்திங் என்ற சிறு நாணயத் தொகையை யபராதமாக விதித்து அவரவர் செலவு அவரவருடன் என்றும் தீர்ப்புச் செய்தனராம்.

* * *

புகையிலையிலிருந்து செய்யப்படும் எவ்வகைச் சாமான்களும் புகையிலையும் காபூலிலோ அதன் சுற்று வட்டங்களிலோ யாரும் உபயோகிக்கக் கூடாதென்றும், மீறி உபயோகித்தாலும் இதில் திருட்டுத்தனம் செய்தாலும் ரூ. ௧000 அபராதம் விதிக்கப்படுமென்று ஆப்கன் அமீர் அமானுல்லாகான் உத்தரவு பிறப்பித்திருக்கிறார்.

# வைசியநாட்டுச் செய்தி

## வேந்தன்பட்டி.

இவ்வூர்த் திருவள்ளுவர் வாசகசாலைக்கு ந.மு. சண்முகஞ் செட்டியாரவர்கள் தமது புதல்வன் சொக்கலிங்கத்திற்கு நாளிது மீ ௧௨ நடந்த காப்புக்கட்டுப் புதுமையில் ரூ. ௫ சம்பாவனை செய்தனுப்பியுள்ளார்கள். அவர்கட்கு எங்களின் நன்றியைச் செலுத்துகிறோம் என உபகாரியதரிசிஎழுதுகிறார்.

* * *

## தோங்குவா.

இந்த ஊரில் பொங்கி மடத்தின் (சாதுக்கள் ஆலயம்) அருகிலிருந்து நதிக்கரையில் பொங்கிகளால் வைக்கப்பட்ட வாழைமரங்களில் ஓர் மரத்தில் ஐந்து பூவுடன் தார்போட்டிருக்கிறது. அதைப் பொங்கிகளால் கம்பவுண்டு செய்யப்பட்டுப் பார்க்வரும் ஜனங்களிடம் காலணா வீதம் வாங்கிப் பொங்கி மடத்திற்குச் சேர்க்கிறார்கள். இதுவும் கலியுக விநோதமே என்று பர்மாவாசி எழுதுகிறார்.

* *

## கூழிபிறை.

தனவைசிய வாலிபர் சங்கத்தில் நாளிது ஆடிமீ ௩௨-௨ வியாழக்கிழமை மாலை ௩-௩0-மணிக்கு ஸ்ரீமாந் வெ. கு. செ. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் தலைமையின்கீழ் மதுரை ஸ்ரீமாந்தியாகராஜ ஐயரவர்களால், இந்தியர்களின் நிலைமையும் கைத்தொழில் வியாபாரமும் என்னும் விஷயங்கள் மிக விரிவாக சொற்பெருக் கிடப்பட்டவுடன் தலைவரவர்களின் முடிவுரையுடன் சபை மங்களகரமாய் ௫-மணிக்கு நிறைவெய்தியது என்று காரியதரிசி எழுதுகிறார்.



# இந்தியச் செய்தி.

மகாத்மா சிறை சென்று இன்றோடு ௫௨௫-நாட்களாகின்றன. ஷுக நாட்கள் கருகூ.

* * *

வெள்ளத்தினால் இரங்கூனில் ௨,௨௩,000 ஏகரா விஸ்தீரணமுள்ள நெல்வயல்கள் அழிந்துவிட்டன.

* * *

சென்னை மாகாணத்தில் சுயராஜ்யக் கட்சியார் மும்முரமாகப் பிரசாரஞ் செய்யப் புறப்பட்டிருக்கிறார்கள்.

* * *

பாடலிபுத்திர உயர்தர நீதிமன்றத்தின்நியாயவாதியாக ஸ்ரீமதி சுதன் சுபாலா என்னும் மாது பதிவு செய்துகொள்ளப்பட்டார்.

* * *

சென்னைக்கும் இரங்கூனுக்கும் கம்பியில்லாத தந்திப் போக்கு வரவுக்குண்டான ஏற்பாடுகள் அநேகமாய் முடிவடைந்து வருகின்றன.

* * *

சட்டசபையினர் அநுமதிக்காத ௫0,000 ரூபாயை, வங்காள மாகாணத் தலைவர் தமது விசேஷ அதிகாரத்தைக் கொண்டு காவற்கூடத்திலாகாவுக்கு அநுமதித்தனர்.

* * *

ஆவணி ௨-௨ விடுதலையாகிவந்த பஞ்சாப் தலைவர் ஸ்ரீமான் லாலா ஜைபதிராய் அவர்கள், வடக்கே நடந்துவரும் இந்து முஸ்லீம் வேற்றுமைகளுக்கு வருந்துகின்றனராம்.

* * *

சேலம் நகர பரிபாலன சபையாரது நிர்வாகத்துக்குட்பட்ட பள்ளிக்கூடங்களில் பாரதியார் கீதங்களில் சிலவற்றைப் பாடமாகவைப்பதென்று அச்சபையார் தீர்மானித்திருக்கின்றார்கள்.

* * *

திருப்பரங் குன்றத்தில் தாய்க்குரங்காகிய தலைமைக் குரங்கு கருப்பத்துடன் புளிய மரத்திலிருந்து வீழ்ந்து இறந்துவிட்டது; அதற்கு விசேஷ வைபவத்துடன் சமாதி காரியத்தை நடத்தி வைத்தார்கள்.

* * *

உதயபுரி ஐதராபாத் ஸமஸ்தானத் தலைவர்கள் தங்கள் பதவிகளைத் துறந்துவிட உத்தேசங் கொண்டிருப்பதாகவும் பிரஜைகள் கவலை கொண்டிருப்பதாகவும் "நேஷன்" பத்திரிகைகூறுகிறது.

* * *

கொழும்பில் வெளியிடப்பெற்ற "தேசநேசன்" பத்திரிகைஇரண்டாம் முறையாக நிறுத்தப்பட்டிருக்கிறது. இலங்கை வாசிகளின் பத்திரிகாபிமானம் இவ்வளவுதானோ? என்று பணம் பத்திரிகை வருந்துகிறது.

* * *

ஆகஸ்ட் ௨௯-௨ இந்துக்களுக்கு முக்ய தினமென்று அறிவிக்கப்பட்டிருக்கிறபடியால், அன்று வேலை நிறுத்தம் செய்யாமல், அடுத்த நாளாகிய ௨௭௨ செய்து கெனியா விஷயத்தைப்பற்றிக் கண்டிக்க வேண்டுமென்று யவ்வன இந்தியா கூறுகிறது.

* * *

அபராதத் தொகையைக் கட்ட மறுத்து நாகபுரிச் சிறை புகுந்த, பாட்ணா ஹரிதேவ் நாராயண சிங், சிறையிலேயே இறந்துபோக, நாகபுரியில் ஸ்ரீமான் ராஜேந்திர பாபு என்பவரால், அந்த இளஞ் சிங்கமாகியபாட்ணா சிங்கினுடைய சரீரம் தஹனம் செய்யப்பெற்றது.

* * *

இன்னும் ௧-மாதத்திற்கெல்லாம் மகாத்மாவின் ஜன்மதினம்வரப்போகிறது. அன்று, அத்தினத்தைக் கொண்டாடும் முறையாக நாமெல்லோரும் அன்று அவர்கள் எடுத்துக் கொள்ளும் சிறை யுணவு போன்ற உணவையே எடுத்துக் கொள்ள வேண்டுமென்று சொல்லப்படுகின்றது.

* * *

தீண்டாமையை யொழிக்கப் பம்பாய்ச் சட்டசபையில் ஆக்கப்பட்டுள்ள சட்டப்படி, பொதுச் செலவிலேனும் அரசாங்கச் செலவிலேனும் வெட்டப்பட்ட — கட்டப்பட்ட கிணறுகள் சத்திரங்கள்முதலியவற்றைத் தீண்டத் தகாதவர்களும் உபயோகித்துக் கொள்ளலாமாம்.

* * *

சுயராஜ்யமடைய ஒத்துழையாமையே தகுந்த மார்க்கமென்று எண்ணியிருப்பவர்கள் டில்லி விசேஷத் தேசிய மகாநாடு வேறுவிதமாகத் தீர்மானித்தாலும், ஒத்துழையாமை யம்சத்தினின்று மாறுமலிருத்தல் வேண்டுமென்று ஸ்ரீமான் ராஜேந்த்ரப்ரஸாத் அவர்கள் குறிக்கிறார்கள்.

* * *

அயல்நாடுகளிற் சென்று வைத்திய ரஸாயனச் சரக்குகளைச் செய்யும் உயர்தரக்கல்வியைக் கற்றுக் கொள்வதற்காக ஸ்ரீமான் பி. என். நபாருக்கும் நெசவுக்கைத்தொழிற் கல்விக்காக ஜனுப் பத்ருதீன் டையாப் ஆலிக்கும் இவ்வாண்டு பம்பாய் அரசாங்கத்தார் உபகாரச் சம்பளம் கொடுத்திருக்கிறார்கள்.

* * *

கடைசியாகச் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாட்டின்படி மன்னர்சபையின் கூட்டம் டில்லியில் நவம்பர்மீ ௧௫-௨யில் கூடுமென்று தெரிகின்றது. இம்மன்னர்கள் தன்மதிப்புக் குறையாதவர்களாயிருந்தால், அச்சமயம் அநியாயமாக முடியிழந்து தவிக்கும் நாபா மகாராஜா விஷயமாகப்பேசி ஆவன செய்வார்களென்று எண்ணுகிறோம்.

* * *

தமிழ்நாட்டுத் தேசியஸபையின் ௧௯௨௩-ஷு ஜூலை மாதத்திய வரவு செலவுக் கணக்குப் பட்டிப்படி வரவு ரூ. ௧,௨௧,௭௮0—௧௪—0 என்றும் பலவகைச் செலவுகள் போகப் பொக்கிஷதாரிடம் ௯௨,௨00—0—௯ ரூபாய்களும் காரியதரிசியிடம் ௧௮௨—௧0—0 ரூபாய்களும் இருப்பு என்றும், இவை பரிசோதகரால் பரிசோதனை செய்யப்பெற்று திருச்சியில் ஆகஸ்ட் ௧௧-௨ கூடிய காரியக் கூட்டத்தாரால் அங்கீகரிக்கப்பட்டதென்றும் ௧௪-௮-௨௩ல் காரியதரிசியவர்கள் எழுதுகிறார்கள்.



நாளென்செயும்! வினைதானென்
 செயும்! எனை நாடிவந்த
கோளென்செயும்! கொடுங்கூற்
 றென்செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
 தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்குமுன்னே
 வந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.


தனவைசிய ஊழியன்.

காரைக்குடி, ஆவணி-௩௨ ௯-உ


## சாதாரணமானதன்று.

நமது ஊழியர் சங்கம் இந்நாள் செய்து வரும் வேலை சாதாரணமானதன்று. இது பேச்சுக் காரியமன்று; எழுத்துக் காரியமன்று; செய்கைக் காரியமாகும். அறிஞர்களுள் இக்காரியத்தைப் போற்றிப் புகழாதாரில்லை. அரும் பெரும் தியாகஞ் செய்து தேசத் தொண்டாம் உயரிய செயலை மேற்கொண்ட தமிழ்நாட்டுப் பேரறிஞர்களுள் இதனைப் பாராட்டாதார் எவருமிலர். தேசத்திற் குழைக்கும் பெரிய வேலையை மேற்கொண்டு சிறை சென்ற பெரியார்களெல்லாரும் நமது சங்க வேலை (புதிய திருமண வேலை) மிக அரிய வேலை என்று மனமார மொழிவார்களானால் இதன்மாண்பு வகுக்குந் தரத்ததோ?

இந்நாள் செய்கையாளர் மிகச் சிலர். இக்காலத்தில் ஒரு சங்கம் செய்கையிலிறங்கி உழைத்தல் அருமை. அதிலும் சங்கம் இந்நாள் இறங்கியிருக்கும் துறை சாதாரணமானதா? ஒரு வகுப்பார் வேறு வகுப்பில் பெண்ணெடுப்பதென்பது, வழக்கவழியின்றிப் பிற வழி செல்லப் பெரிதும் அஞ்சும் பல்லோர் மல்கிய இந்தியநாட்டில் எத்துணை பெரிய காரியம்!

இந்திய நாட்டு மாபெரும் கூட்டமாகிய தேசிய மகாசபையும் வேறு பல அபிப்பிராயமுள்ள பற்பல சபைகளும் வேறு பல காரியங்களுள் பேத அபிப்பிராயங்கொண்டபோதிலும், ஜாதி வித்யாசத்தை ஒழிக்க வேண்டுமென்பதில் பெரும்பாலும் ஒரே நோக்கங் கொண்டனவாகவேயிருக்கின்றன. ஜாதி வித்தியாசத்தை யொழிக்க இத்தகை மணங்கள் இன்றியமையாதனவாகும். நமது சங்கம் அந்நோக்கத்தோடு இதிற் புகவில்லையெனினும், இந்நாள் தேசமிருக்கும் நிலையில் அதில் வந்தே முடியுமென்பதில் என்ன தடையிருக்கிறது?

தேசத் தலைவர்களில் தமிழ்நாட்டிலுள்ள முக்கியமானவர்களில் நமது உழுவலன்பர் சிலரிடம் "ஜாதீய அலுவலை மிகுதியும் தலையிற் போட்டுக் கொண்டமையால் தேசிய இயக்கத்திற்கலந்து அதிகமாக உழைக்க முடியவில்லையே" யென்று நாம் வருந்தியபொழுது, "தேசிய வேலைகளில் பிரதானமான வேலை, நீங்கள் செய்யும் வேலையே; நீங்கள் இதனையே விடாது செய்துகொண்டு செல்தல் நாட்டிற்குச் சாலவும் நன்மை பயக்கும்" என்று கூறினார்களென்பதை அறிவிக்க விரும்புகிறோம். நமது சங்கம் ஜாதீய நலன் ஒன்றையே, குறிக்கொண்டு இம்மண வேலையிற் றொடங்கிய போதினும், இதன் பயன் நாட்டின் நன்மையில் வந்து முடிகின்றது.

எனவே, இக்காரியத்தின் பெருமையையும் இது சாதாரணமானதன்று என்பதையும், இதனால் நாடு பெருநலனடையுமென்பதையும் எண்ணி தமிழ் நாட்டுத் தேசாபிமானிகள் இம்முயற்சிக்கு தங்களாலான உதவி புரிய முன் வருதல் கடமையாகும். இம்மணத்தில் அவ் அன்பர்கள் செய்யத் தக்கது பெண்தேடித் தருதலேயாகும்.

பெண் தேடுதல் பெருஞ் சிரமமேயெனினும் அதுகூடப் பாதகமில்லையென்று நிலையில் செய்து விடுகின்றனர் நமது மணமக்கள். மணமக்கள் வர அஞ்சுவது பெரிதும் வருந்தத் தக்கதாகும். மணமக்கள் மௌனம் சாதித்து விடுவார்களானால் மணம் நடப்பது எப்படி?

சங்கத்தார் எவ்வளவு செய்கையிற் காட்டிய போதினும் சங்க இயக்கம் மாப்பிள்ளை பெண் ஆகிய இருசாராரின் சம்மதத்தையும் பொறுத்தே நடைபெற வேண்டியதாக விருக்கிறது. இரண்டுக்கும் பெரு முயற்சி நடந்துதான் வருகிறது. இரண்டினும் இந்நேரம் மாப்பிள்ளை வருதலே பெருங் கஷ்டமாக விருக்கிறது.

ஜாதியபிமானிகள் ஒவ்வொருவரும் உண்மையில் ஜாதியில் அபிமானம் இருக்குமானால் இந்நாள் மண வேலை தவிரப் பிற வேலை பயன்படாதென்பதை யுணர்ந்து இம்மண வேலையில்—அதிலும் மாப்பிள்ளைகட்கு உண்மையை யெடுத்து மொழிந்து சேர்க்கும் தொண்டில் ஈடுபடல் வேண்டும். சமூகத்தின் இற்றைய நிலையில் இதைத் தவிர, வேறு காரியங்களால் பிரயோஜனம் ஏற்படாது. நமது ஊழியனின் முதல் ஒன்றரை ஆண்டு வேலைகளும் மகாநாட்டில் உடைந்து பயனற்றுப் பழைய நிலையைச் சமூகம் எய்திய பின்னர், சென்ற ஆவணி முதல் சங்கத்தின் செய்கையால் விளைந்த பெரும்பயன் மறுக்கத் தக்கதன்று. சென்ற ஆவணியில் சமூகம் அடைந்த மாற்றத்தைப் போன்ற மாற்றம் ஆயிரக் கணக்கான ஆண்டுகட் கொருமுறை நடக்கத் தக்க ஒன்றாகும் என்பதை முன்னரே எழுதியிருக்கிறோம்.

சென்ற ஆவணியில் சமூகம் பழைய நிலையினின்றும் மாறி புதிய நிலையெய்திப் புத்துயிர்பெற்றது.

இந்த சமூகத்தின் உயிர் அனைய நல்லியக்கத்தை வேகமாக நடைபெறச் செய்து சமூகத்தை உயர்த்த வேண்டுமானால், இக்காரியம் சாதாரணமானதன்று என்பதை உன்னி இச்சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக்கொள்ள மணமக்கள் கொஞ்சமும் பின் வாங்குதல் ஆகாது.



## இடி முழக்கம்.

### அஹிம்ஸா தர்ம வெற்றி.

நாகபுரியில், கடந்த மூன்று மாத காலங்களாக, அதிகாரிகள் பொறுமை கோபம் அடக்குமுறை என்னும் ஆயுதங்களைக் கொண்டும், ஸத்யாக்ரஹிகள் பொறுமை தந்நலமறுப்பு சிறைபுகுதல் என்னும் ஆயுதங்களைக் கொண்டும் விடா முயற்சியுடன்—பரஸ்பரம் வீரத்துடன் நடத்திவந்த கொடிய போர் என்னும் கடுமையான யுத்தமானது, சாந்த மூர்த்தியான மகாத்மா காந்தயடிகளது புண்ய தினமான (ஆகஸ்டு௴) நிகழும் மாதம் ௧௮-ல் அன்று ஸத்யாக்ரஹிகட்கு வெற்றியைத் தந்தது. "வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம்." ஸத்யாக்ரஹிகள் பூர்ண ஜயம் கொண்டு வாகை மாலை சூடிக் கொடியுடன், அதுவரை தடுக்கப் பட்டிருந்த இடங்கள் வழியாக ஊர் வலம் சென்று திரும்பினர். கொடியூர்வலத்தை ஐரோப்பியரும் மற்றவரும் சந்தோஷத்துடன் பார்த்துக்கொண்டிருந்தனர். இதுவரை இந்தப் போரின் நிமித்தம் பல மாகாணங்களிலிருந்து போந்து வீரத்துடன் சிறைபுகுந்த ஸத்யாக்ரஹ வீரர்களெல்லோரும் விரைவில் விடுதலை பெறுவார்களென்று தெரிகிறது. இந்த நமது கொடியின் வெற்றியே அஹிம்ஸாதர்ம வெற்றியாகும்.

### திருப்பதி நகரபரிபாலன சபை.

இந்த சபையார் கதர்க் கடையொன்று வைப்பதற்காக ௭00 ரூ. அநுமதித்திருக்கிறார்கள் என்பது தெரிந்து சந்தோஷமடைகிறோம். இம்முறையில் முதன்முதல் முன் வந்தது இந்த சபைதான் என்று தெரிகின்றது. இம்முறையை மற்ற நகர பரிபாலன சபையாரும் பின்பற்ற வேண்டுகிறோம்.

### வைத்தியர் நாயுடு.

வைத்தியர் வரதராஜலு நாயுடுவை மதுரை சிறையில் வரம்புமீறி நடத்திக் கேழ்வரகு அரைக்கும் வேலை கொடுத்து உடை உணவு ஏற்றவாறு அளிக்காது துன்புறுத்தி வந்தனர். இதனையறிந்த வைத்தியரின் மனைவியாகிய நமது சகோதரி ருக்மணியம்மாள் ஒரு தந்தி சிறையின் பெரிய அதிகாரிக்குக் கொடுத்தார்கள். இப்பொழுது வரதராஜர் திருச்சி சிறைக்கு மாற்றப்பட்டிருக்கிறார். அங்கு நடத்தும் முறை தெரியவில்லை. நாட்டின் பொருட்டுச் சிறை புகுந்த நல்லோர்களை நடத்தும்முறை நன்று! நன்று!! செல்வ வாழ்வுடைய ஒருவரை மாவா அரைக்கச் சொல்வது! மணமாலை யருமையைப் புனைபவர்களே யறிவர்!

### ஆகஸ்ட் மாதம் உஎ௳.

கெனியா இந்தியர்க்கு நேர்ந்த அவமானம் நம்மிந்திய நாட்டினர்க்கே நேர்ந்த அவமானமாதலால், அதற்காக நாம் தற்போது செய்யவேண்டியதென்ன? அன்று எல்லா இந்தியர்களும் வேலை நிறுத்தஞ்செய்து கூட்டங்கூடி கெனியா முடிவைப் பற்றிக் கண்டிக்க வேண்டுமென்று அகில இந்தியத் தேசிய ஸபைக் கூட்டம் கூறுகிறது.

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| இரங்கூன் உண்டியல்வட்டம் | ௯-அ.0 |
| சென்னை உண்டியல் வட்டம். | 0-எ-0 |

**கோப்புடையம்மன்கோவில்:-** ஊரில் அம்மை பரவாதிருக்கச் செய்யவேண்டுமென்னும் பிரார்த்தனையுடன் ஊர் மஹா ஜனங்கள் கொப்புடையம்மனுக்கு அபிஷேக அலங்கார பூஜை ஊர்வலம் முதலியவைபவத்துடன் உத்ஸவம் கொண்டாடினார்கள். திங்கள் சிம்மவாகனத்திலும், செவ்வாய் குதிரைவாஹனத்திலும் புதன் விருஷப வாஹனத்திலும் அம்மன் ஊர்வலம் வந்தது வைபவமாக இருந்தது. ஒவ்வொரு நாளும் உபயம் முறையாக நடந்தது.

**இந்து மதாபிமான சங்கம்:—** இந்த ஸங்கத்தின் ஆறுவதாண்டு நிறைவுவிழாவை நிகழும் மாதம் (ஆவணி) உ௩-அல்லது உ௪-௳ கொண்டாடுவதாகத் தீர்மானித்திருக்கிறார்களென்று "குமரன்" பத்திரிகை கூறுகிறது.

## தந்திச்செய்தி.

பம்பாய் ஆவணி௴ எ௳

சென்னை உண்டியல் விலை
ரூ.ஈ நூறுக்கு ...
ஸம்ம ...
ரப்பர் விலை ...

இரங்கூன் ஆவணி எ௳

| | |
|---|---|
| இயந்திர அரிசி பெரிது | ௩௯0 |
| ஷை சிறிது | ௭௩0 |
| கடலை | ௩௨௫ |
| உழுந்து | ௩௯௫ |
| தட்டைப்பயறு | ௭௯0 |
| வெள்ளை மொச்சை புதிது | ௨௩௫ |
| ஷை பழையது | ௯௮௫ |
| சிவப்பு மொச்சை | ௯௮0 |
| கோதுமை | ௩௯௫ |
| துவரை | ௩௭0 |
| உண்டியல் | ௯௭௫-0-0 |
| வெள்ளி விலை | ௮௯—0—0 |
| தங்கம் | ௩௭-௯0—0 |
| பவுன் விலை | ௯௩—௭—0 |

பணம் நிதானம்.

சென்னை ஆவணி ௬௳

| | |
|---|---|
| பவுன் ஒன்றுக்கு விலை ரூ. | ௯௯—அ—0 |
| வெள்ளிரூபாயெடை௧-க்கு ரூ. | 0-௯௩-0 |

## மதிப்புரை.

### குமரன் வாரப் பதிப்பு.

"குமரன்" என்னும் பெயரோடு வாரப்பதிப்புப் பத்திரிகையொன்று இவ்வூரினின்றும்சென்ற புதனன்று வெளியாகி நமது பார்வைக்கு வந்திருக்கிறது. இதன் ஆசிரியர் நமது பத்திரிகைக்கு பிரதமத்தில் ஆசிரியராகவிருந்த திருவாளர் சொ. முருகப்ப செட்டியார் அவர்கள். இம்முதல் பத்திரிகையின் தலையங்கத்தில் "சமூக வளர்ச்சி யொருகண்ணும் சமயவளர்ச்சி யொரு கண்ணுமாகவே குமரன் கருதி ஊழியம்புரிந்து வருவான்" என்றும், "தேசியவிஷயங்களுள் மிகச் சிறந்ததான கதரியக்கத்தில் முற்றுங் கலந்துழைப்பதும் சமய வழியில் அஹிம்ஸா தருமத்தையே கண்மணியாகக் கருதி யுழைப்பதும் குமரனது நோக்கங்களாகும்" என்றும் பிறவும் கூறப்பட்டிருக்கிறது. இவ்விஷயங்கள் நமக்குப் பெரிதும் உடன்பாடானவையேயாகும். இதன் வருடச்சந்தா உள்நாட்டிற்கு ரூ. ௩. வெளிநாடுகட்கு ரூ. ௪.

### பள்ளத்தூர் ஸ்ரீ மீனாக்ஷி வர்த்தகசாலை விஷயமான பகிரங்கக் கடிதத்திற்குப் பதில்.

ஐயா!

சென்ற ஆடிமீ ௨௯௨ பத்திரிகையில் மேற்படி வர்த்தக சாலையின் தற்கால நடவடிக்கையைத் தெரிந்து கொள்வதன் பொருட்டு எழுதியிருந்ததைப் பார்த்தோம். மேற்படி வர்த்தகசாலை தேசிய கைங்கர்யத்தை முன்னிட்டு லாபத்தை எதிர்பாராது கதர் அபிவிருத்தி சுதேசி சாமான் அபிவிருத்திக்காகப் பலரின் அரிய முயற்சியால், பங்கு ௧-க்கு ரூ. ௨௫ வீதம் (௫00) ஐந்நூறு பங்கு சேர்த்து, இவ்வூர் கரு. சிவ. காசிநாதன் செட்டியாரிடம் நிர்வஹிக்கும்படி ஒப்புவிக்கப்பட்டது. இந்நிலையில் வர்த்தகசாலை சரியாக நடைபெறவில்லையென்றும் கணக்குகள் சரியாக இல்லையென்றும் சாமான்களுக்கு இருப்புக் கணக்கே கிடையாதென்றும் பல வகைகளில் சாமான்கள் குறைவேற்படுகிறதென்றும் நிதானமற்ற விலை விற்கிறார்களென்றும் தெரியவந்தது. அதன்மேல் இன்னும் இருக்கிற சாமான்களும் கபளீகரம் ஆகிவிடக்கூடாதென்று நினைத்து அநேகர் பிரயாசையின் பேரில் சென்ற ஆடிமாதம் ௨௪-௨ காலை ௯-மணிக்குப் பங்குக்காரர்களின் பொதுக்கூட்டத்தில்வந்திருந்தவர்கள் கணக்கு வகையறாக்களைப் கேட்டதில், மேற்படி காசிநாதன் செட்டியார் கணக்கு சரியாகவில்லையென்றும் அதையும் காட்ட முடியாதென்றும் இருப்பு முதலியவை ஒப்புவிக்கமுடியாதென்றும் சொல்லிவிட்டார். அதன்மேல் பங்குக்காரர்களெல்லாம் இறைச்சல்போட்டார்கள்.

பின் மத்தியானம் இரண்டுமணி சுமாருக்கு ஒரு வகையாகப் பொக்கிஷதாரரிடமிருக்கிற ரூபாயையும் வர்த்தக சாலையில் மீதம் கிடக்கும் சாமான்களையும் வேண்டுமானால் பிரித்துக்கொண்டுபோங்களென்று சொல்லிவிட்டார். அதன்மேல், பங்குக்காரர்களில் அநேகர் ஷெயாரிடம் இனி விட்டால் இதுவும் போய்விடும்; வந்ததை வரப்பற்றுவோம் என்று நினைத்துக் கீழ்க்கண்டபடிப் பிரித்துக்கொண்டார்கள். அசல் பங்கு ௧-க்கு ரூ. ௨௫க்கு இரண்டுவருஷ வட்டி லாபமன்றியில் ரொக்கம் ரூ. ௧௨-ம் ௧௧ ரூ. விலைவைத்த ௯-ரூ. பெறும்படியான உபயோகமற்ற கம்பளிக்கயிறு கத்தி முதலிய சாமான்களும் இரவு ௧0-மணிக்குக் கிடைத்தன. அயலூர் பங்குக் காரர்களெல்லாரும் ஷெ-சாமானுக்காக மறுநாள் வரை காத்திருக்கும்படி நேர்ந்தது. தற்பொழுது, மேற்படி ஸ்ரீமான் கரு. சிவ. காசிநாதன் செட்டியாரவர்களிடம் இன்னும் பிரிக்க முடியாத பாக்கியுள்ள சாமான்களும் ரொக்க இருப்பும் குறைந்த மதிப்பு சுமார் ரூ.௨000வரை இருக்குமென்று தெரிகிறது. தற்காலம்கூட்டுறவு முறையில் நம்பிக்கையில்லாத நம்மவர்களிடை அத்திபூத்ததுபோல் ஒரு கூட்டுறவு முறை தோன்ற, அதுவும் இப்படி ஆனமை விசனிக்கத்தக்கது. மேற்படி காசிநாதன்செட்டியார் பல குமாஸ்தாக்களை மாதம் ௧-க்கு ௧00 ரூபாய் வரை சம்பளம் கொடுத்து வைத்துக்கொண்டிருந்தும் கணக்குகள் ஒன்றும் சரியாக இல்லை; அதையும் இருந்துக்காட்ட முடியாதென்று சொல்லிவிட்டார்.

மேற்படி வர்த்தகசாலையில் வருடம் ஒரு முறை கணக்குகள் முடித்து ஒப்புவிக்க வேண்டுமென்றும் கடன்கொடுத்தல் வாங்குதல் செய்யக்கூடாதென்றும், அதனால்வரும் லாப நஷ்டம் அங்கத்தினர்களைக் கட்டுப்படுத்தாதென்றும் வர்த்தக சாலை ஸ்தாபனத்தின் பொழுதே விதிஏற்பட்டிருக்க, அதைக்கொஞ்சமும் கவனியாது கடன்கொடுத்து இருப்பதாகவும், நிலுவை பாக்கி ரூ. ௭00-வரை இருக்கிறதென்றும் இப்பொழுது சொல்லுகிறார். இவர் போன்ற ஒருவரை நமது வர்த்தக சாலை அதிபராகக்கொண்டு ஆரம்பிக்கப்பெற்றது ஒரு பெரிய துர்ப்பாக்கியமாக முடிந்தது. மேற்படி காசிநாதன் செட்டியாரவர்களிடம் வர்த்தகசாலையின் பாக்கியிருக்கும் சாமான்களும் பணமும் எப்பொழுது வெளியாகுமோ? ஈசனுக்குத்தான் தெரியும். கட்டுப்படாத ஒருவரிடம் ஒப்புவித்ததன் பலனாகப் பங்குக்காரர்கள் இக்கஷ்டத்தையடைய வேண்டி நேர்ந்ததென்று விசனத்துடன் தெரிவிக்கிறோம். இப்பத்திரிகையில் வெளியிட முடியாத இன்னும் அநேகம் காரியங்களை மேற்படி ஸ்ரீமான் செட்டியார் செய்திருப்பதையும் எழுத முடியாமைபற்றி வருந்துகிறோம். உள்ளூர்பங்குக்காரர்கள்.

### பாஸியன்.

௯—௮—௨௩.

பாசியன் ஜில்லா நத்தஞ்சூரன் என்னும் ஊரில் ஆற்றுப்பெருக்கினால் ஆடிமாதம் ௧௫௨ இரவு ௩-மணிக்கு ஊருக்கு முதலாவது வான்கரை உடைத்துக் கொண்டு ஊரெல்லாம் ஜலப்பிரளயமாக ஆகிவிட்டது. ௧௭௨ மாலை ஐந்தரை மணிக்கு நத்தஞ்சூரனுக்கு வடபுறம் முக்கால் மைலிலுள்ள வான்கரை புடைத்துக்கொண்டு ஏகவெள்ளமாகப் பெருகியது. அதனால், அவ்வூர் ஜனங்கட்கும் நகரவைசியர்கட்கும் அதிக சிரமம் ஏற்பட்டு ஸ்ரீ குகப்பெருமான் கிருபையாலே நகரத்தார்கள் இங்கு வந்து சேர்ந்தார்கள். மற்றவர்கட்குத் தங்கியிருப்பதற்கு இடமில்லாமலும் சாப்பாட்டுக்கு அரிசி முதலானவை யகப்படாமலும் மிகுந்த சிரமம் ஏற்பட்டது. அவ்வமயம் அரிசி வியாபாரம் செய்துக்கொண்டிருந்த ஒரு பர்மிய மாது, இதுதான் சமயமென்று விலையை ஏற்றி விற்க ஆரம்பித்தாள். அதனையறிந்த அரசாங்க அதிகாரிகள், அவளைக் கண்டித்து முன்னைய விலைக்கு மூன்றிலொரு பங்காக விற்கும்படி ஏற்பாடு செய்து சௌகரியம் செய்த போதும், பலர் அரிசியகப்படாமால் வருந்தும்படி நேரிட்டது. நிற்க;

மேற்படி ஊரை அடுத்திருக்கக்கூடிய பாண்டோ சூம்பியோ அத்தோ சொங்கோம் சொயாலா முதலிய சில ஊர்களிலும் வெள்ளப்பெருக்கினால் வீடுகள் மூழ்கி, வெகு சிரமமான முயற்சியால் நகரத்தார்கள் இங்கு வந்து சேர்ந்தார்கள்; மற்ற ஜனங்கள் தங்கியிருப்பதற்கு எங்கும் கரை தட்டுப்படாதபடியால், தாய்களைக் காணமலும் பிள்ளைகளைக் காணமலும் தகப்பனைக் காணமலும் மற்றும் வேண்டியவர்களைக் காணமலும் தவித்தவர்களாகி, ஆங்காங்கு மரங்களில் ஏறிக்கொண்டும் உணவு முதலியவில்லாமலும் உயிரைக்காப்பாற்றிக்கொள்ள வகை தெரியாது தவித்துக்கொண்டிருந்தனர். அங்கு வெள்ளப்பெருக்குப் பந்தோபஸ்துக்காகச் சென்றிருந்த அரசாங்க அதிகாரிகள், அவ்வழியே வேறு பல ஊர்கட்குச் சென்று கொண்டிருந்த கப்பல்களை நிறுத்தி, உணவு முதலியன வில்லாமல் மரங்களில் தொத்திக்கொண்டு தவிக்கும் ஜனங்களை யக்கப்பல்களில் ஏற்றிப் பாசியனுக்கு அனுப்பினார்கள். இரண்டு மூன்று தடவைகளில் ௯00, ௭00 ஜனங்கள் வந்து சேர்ந்தனர். இவர்கள் பிராணவஸ்தையிலிருந்து தப்பினார்கள். அவ்வூர்களில் கட்டி வைக்கப்பெற்றிருந்த நெல் முதலிய தானிய வகைகளும் மாடு கன்று முதலிய மிருக வகைகளும் மற்றும் ஜீவப்பிராணிகளும் வெள்ளத்திற் சென்று கொண்டிருக்கின்றன. இவ்வெள்ளப் பெருக்கு ஒழிந்து ஜீவப்பிராணிகள் உய்யுமாறு குகப்பெருமான் கருணை செய்வாராக. வயி. வயிரவன்.



### இளிச்சவாயர் எழுதுகிறார்:— எனக்கேற்ற பெண்டாட்டி.

கண்மணி! நானும் இளிச்சவாயன்; நீயும் களிச்ச பெண். உன்னையும் தேடுவாரில்லை; என்னையும் நாடுவாரில்லை. எனக்கும் உனக்கும் அமைந்ததே பொருத்தம்; இல்லாவிட்டால் மெத்த வருத்தம். எனது கற்பரசி! உன் கழுத்துக்குத் தாலிகட்டிக் கைக்கு வளையவிட்டு நீ வலப்புறமும் நான் இடப்புறமுமாக மணையில் வீற்றிருக்கும்போது என்னென்ன வெகுமதி வருந்தெரியுமா? துப்பட்டா! துப்பட்டா!! கீழே துப்பட்டா! மேலே துப்பட்டா!! முன்னாலே துப்பட்டா! பின்னாலே துப்பட்டா!! மணையிலே துப்பட்டா! பந்தரிலே துப்பட்டா!! துப்பட்டாமயமாக நம்மை ஜோடித்து விடுவார்கள். நான் கிழவனாக இருந்தாலும் குதிரையிலேறுவதில் உனக்குச் சந்தேகம் வேண்டாம். நான் உன்னை நினைத்து ஓரேபாய்ச்சலில் ஏறிவிடுவேன். என் அதிர்ஷ்டம் எனக்கு அறுபது வயதிலும் ஆரத்தி கிடைக்கும். நான் ஊர்சுற்றி வருவேன். என்னைக் கண்டவுடன் அன்று தினம் அழுத பிள்ளைகூட ஆனந்திக்கும். வேறு நமக்கென்ன வேண்டும்? நீ அம்மி மிதித்து அருந்ததியைத் தரிசிப்பாய்; நான் மௌனமாகவேயிருப்பேன். நீ பின்வாங்கவேண்டாம்; தைரியமாகச் செய். ரூபாய் ஐம்பதாயிரம் செலவாவதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. எனக்கேற்ற பெண்டாட்டியாக என்னைப்போல் முன் பின் அனுபவமுள்ள நீ எனக்குக் கிடைத்ததே திருப்தி ஆனால், வெகுமதியெல்லாம் எனக்குத்தான் தரவேண்டும்; நீ எடுத்துக் கொள்ளக்கூடாது என்று இளிச்சவாயர் பின்னும் எழுதுகிறார்.

### திருக்குற்றாலம்.

அருவி:—இரண்டு நாட்களாக மழை அதிகமாகப் பெய்கிறபடியால், அருவியில் ஜலம் அதிகப் பெருக்காக வருகின்றது. அதனாலே ஜனங்கள் உத்தேசித்து வந்தபடி அருவியில் நின்று முழுகுவதற்கு மிகவும் இடையூறாகிவிட்டது. கைபிடித்து நிற்கும் கம்பிகளோ பலஹீனங்களாகிவிட்டன. கம்பியில்லாமல் நிற்கவோ பாறைகள் வழுக்கலாகியுள்ளன. இது பொதுஜனவிஷயமானதால், இடையூறுகளைநீக்கி ஜனங்கட்கு சௌகர்யம் செய்து கொடுப்பது அரசாங்கத்தாரையோ தேவஸ்தானத்தாரையோ பொருத்தகாரியம். தீர்த்த கட்ட விஷயமாதலால் தேவஸ்தானத்தாருக்கே முக்கியமான பொறுப்புண்டென்பது வெகு ஜன அபிப்பிராயம்.

ஸ்தலஸ்தாபன ஸபை:—ரஸ்தாக்களினுடைய சீர்கேடு சொல்லத்தரமன்று. ஐந்தருவி ரஸ்தாவோ நிரம்பச் சீர்கேடாக இருக்கின்றது. ஸ்தலஸ்தாபனத் தலைவரவர்கள் இதுவரை இங்கு ஸ்நானத்துக்கு வந்திருப்பார்கள்; அவர்கட்கே இந்த விஷயம் தெரிந்திருக்கும். ஆனால், அவர்கள் கவனியாதிருப்பது விசேஷம். போதுமான வெளிச்சம் போடாதிருப்பது ஸ்தலஸ்தாபனக் குறைவேயாகும்.

பத்திர தீபம்:—பத்திர தீபத்துக்காக நேற்று தீபஸ்தாபனம் செய்து யாகபூஜையும்செய்தார்கள். இன்று காலை சுவாமி அம்பாள் தரணி பீடத்துக்கு ருத்திர அபிஷேகமும் அதிக விமரிசையாகச் செய்தார்கள். கோவிலுக்குள் ஜோதிமயமாய்ப் பதினாயிரம் தீபங்கள் போடப்பட்டிருந்தன. ஸ்வாமி புறப்பாட்டுக்கு வேண்டிய ஏற்பாடு சிறப்பாகச் செய்யப்பட்டிருந்ததேனும், மழையின் உபத்திரவத்தால் பெரிய வீதி சுற்றிவர முடியவில்லை. இரவு அகாலத்தில் மழைத்துளிகளோடும் ஸ்ரீ குழல் வாய்மொழியம்பாள் சமேத ஸ்ரீ திருக்குற்றால நாதர் வெள்ளி ரிஷபவாகனத்தில், பவனிவந்ததை அநேகர் தரிசிக்க முடியவில்லை. மதுரைத் திருப்புகழ்ச் சபையாரால் கோவிலில் நடத்தப்பெற்ற பாராயணம் மிக இனிமையாகஇருந்தது. இவ்வுத்ஸவத்தை யிவ்வருஷம் புதிதாக ஆரம்பித்து நடத்திய தர்மகர்த்தர்கள் ஒவ்வொரு ஆடியமாவாசையிலும் நடத்தி வருவார்களென்று எதிர்பார்க்கின்றோம். ஒரு நிருபர்.

### நோட்டீஸ்.

இராமநாதபுரம் ஜில்லா மதகுபட்டி போஸ்டு சொக்கநாதபுரத்தி லிருக்கும் மு. சிவ. மெய்யப்ப செட்டியாராகிய நான் இதன் மூலம் சகலருக்கும் தெரியப்படுத்துவது யாதெனில்:—

மதுரை கரு. பெரி. பள. முத்தையா செட்டியா ரவர்களை பணம் கொடுக்கும்படி நாளிது வருஷம் ஆடிமாதம் ௨௫ தேதி எங்களூர் சி. ராம. அளகப்ப செட்டியாருக்கு ரூ. (௧000) ஆயிரத்துக்கு உண்டியல் ஒன்று எழுதிக் கொடுத்திருந்தேன். மேற்படி உண்டியலும் பணம் பெற்றுக்கொள்ளுமுன் மேற்படி உண்டியல் தவறிவிட்டதாக மேற்படி அளகப்பசெட்டியார் சொல்வதால் அதற்கு பதிலாக மேற்படி தொகைக்கு உண்டியல் கேட்பதால் நாளிது மாதம் ௩௰-தேதி வரை முந்தின உண்டியல் வருவதைப் பார்த்துக் கொண்டு மேல்கண்ட தொகைக்கு உண்டியல் கொடுக்கப்போகிறேன். தவறிவிட்ட இதனடியில் கண்ட மேற்படி உண்டியல் யார்கையி லிருந்தாலும் எவ்வித காரணத்தைக் கொண்டு பணம் கேட்டாலும் பணம் கிடைக்கமாட்டாது. மேற்படி உண்டியல் தவறிவிட்டதாக அழகப்பசெட்டியார் சொன்ன அன்று தினமே மேல்கண்ட மதுரை கரு. பெரி. பள. முத்தய்யா செட்டியா ரவர்களுக்குமேற்படி உண்டியல் தவறிவிட்டது, பணம் கொடுக்காதே யென்று ௧௭-௮-௨௩-ல் தந்தி சொல்லியிருக்கிறது.

### உண்டியலுக்கு நகல்.

ருத்ரோத்காரி வருஷம் ஆடிமாதம் ௨௫-தேதி சொக்கநாதபுரம் சி. ராம. அழகப்பசெட்டியார் வரவு மேற்படி ஊர் மு. சி. வ. பத்து வீடு மனை ஈட்டுக்காக கொடுக்கவேண்டியது ரூ. ௧000 இந்த ரூபாய் ஆயிரத்துக்கும் நாளிது தேதி முதல் மதுரை நடப்புவட்டியுடன் மேற்படியார் ஆடருக்கு கொண்டு வந்தார் வசம் மதுரை கரு. பெரி. பள. முத்தய்யாசெட்டியா ரவர்கள் பணம் கொடுத்து இதில் செலவுடன் யெங்கணக்கில் பற்றெழுதிக் கொள்ள வேண்டியது.

மு. சிவ. மெய்யப்பசெட்டி(யார்)என்ற கையெழுத்து

## விளம்பரம்.

கீழச்சிவற்பட்டியில் சு. அ. சு. அண்டு ஸன்ஸ் என்ற விலாஸத்துடன் துந்துபி௵ தைமீ ௯௨ முதல் பெரிய என்ஜினில் சோடா மிஷின் இணைத்து தேர்ச்சிபெற்றவர்களைக்கொண்டும் ஜலத்தைப் பரிசோதித்தும்ஏழு டாங்குகளில்பில்ட்டர் செய்தும் உயர்தரமான எஸ்ஸென்ஸுகளைச் சேர்த்து சோடா கோலா, ஆரஞ்சு, பைன்ஆப்பிள், லேம்ஜூஸ், ரோஸ், நன்னரி, ஜின்ஜர்பீர், ஜின்ஜர்ஏல், ஸம்மர்கப் டானிக், ஐஸ்கிரீம் இன்னும் அநேக வகைகள் தயாரித்து ஏராளமாக சப்ளை செய்துகொண்டுவருகிறோம். ஒவ்வொரு பாட்டிலிலும் வேண்டிய அளவு க்யாஸ் நிறையப் பெற்றிருக்கும். தங்களுக்கு தேவையான சரக்குகளுக்கு ஆர்டர்களை எதிர்பார்க்கிறோம்.

பல ஊர்களுக்கும் ஏஜண்டுகள் தேவை. விவரம் அறிய விரும்புவோர்கள் கீழ்க்கண்ட விலாஸத்திற்கு எழுதித் தெரிந்துகொள்ள வேண்டியது.

இங்ஙனம் தங்களன்புள்ள,

சு. அ. சு. சுப்பிரமணியன்செட்டியார்,

## விளம்பரம்.

புதுக்கோட்டைச் சமஸ்தானம் திருமெய்யந்தாலுகா மேலைச்சிவற்பட்டியிலிருக்கும் சி. ஆ. சி. சின்னன் செட்டியார் இதனால் சகலருக்கும் தெரிவிப்பது யாதெனில்:—

என் மகன் ௧௮-வயதுள்ள முத்தையா என்ற ஆண்டான் என்பவன் சிலகாலமாக ஒற்றுமையில்லாமல் கெட்டநடவடிக்கை யுள்ளவர்களுடனும் எனக்காகாத விரோதிகளுடனும் சேர்ந்துகொண்டு கெட்ட நடவடிக்கையில் பிரவேசித்துத் துன்மார்க்கமான வேலைகளில் வீண் செலவு செய்துகொண்டு வருவதாகத் தெரிகிறது. என்னிடமிருக்குஞ் சொத்துக்கள் யாவும் என்னுடைய சுயார்ஜிதத்தில் என்னாலே சம்பாதிக்கப்பட்டிருக்கிறது. அவைகளில் ஷியானுக்கு எவ்வித பாத்யமுமில்லை ஷியானுக்கு கடன்கள் வாங்கவேண்டிய அவசியமுமில்லை. ஷியான் சிலர்களின் மயக்கத்துக்குள் அகப்பட்டு ஒருவிதமான பிரதிப் பிரயோஜனமில்லாமலும், இன்னும் சிலர்களிடத்தில் சொற்ப ரூபாய்களை வாங்கிக்கொண்டு ஜாஸ்தியான ரூபாய்க்கு தஸ்தவேஜுகள் எழுதிக்கொடுத்தும் இன்னும் எழுதிக்கொடுக்க ஏற்பாடுகள் செய்துகொண்டிருப்பதாகவும் தெரியவருகிறது. ஷியான் எவ்விதகடன்களாவது அல்லது எனக்கு வரவேண்டியகடன்களையாவது வாங்கவும் தஸ்தவேஜுகள்எழுதிக்கொடுக்கவும் செலவுகள் செய்யவும் யாதொரு பாத்தியமும் அவசியமுமில்லை. ஆனதால், ஷியானுக்கு இதுவரையில் கடன்கள் கொடுத்தும் அல்லது எனக்கு வரவேண்டிய கடன்களைக் கொடுத்தும் எவ்விதமான தஸ்தவேஜுகள் ஏற்படுத்தி இருந்தாலும் அல்லது இனிமேல் கொடுத்து ஏற்படுத்தினாலும் அவைகளுக்கு என்னிடமிருக்கும் எவ்வித சொத்துக்களைப் பொறுத்தாவது என்னைப் பொறுத்தாவது அல்லது (என்குடும்பத்தாரைப் பொறுத்தாவது)கட்டுப்படுத்த மாட்டாதென்பதையும் கடன் கொடுத்தவர் கொடுத்த தொகையை இழந்துவிடும்படியாக நேரிடும் என்பதையும் இதன் மூலம் தெரிவித்துக் கொள்ளுகிறேன் இந்த விஷயமாய் புதுக்கோட்டை கெஜட்டிலும் சுதேசமித்திரனிலும் தெரியப்படுத்தியிருக்கிறேன்.

சி. ஆ. சி. சின்னன் செட்டியார்.

## விளம்பரம்.

—∞✧∞—

தேவகோட்டை

பி. டி. மு. கோர்ட்டு.

௨௩-௵ அசல் நெ ௯௰

| | |
|---|---|
| தேவகோட்டை ஜமீந்தார் அருணாசலம் செட்டியார் | வாதி |
| அ. உ. மெய்யப்ப செட்டியார் வகையறா. | பிரதிவாதிகள். |

இந்த நம்பர் வாதகும ௧௩ முதல் ௧௮ வரை பிரதிவாதிகளுக்கும் பாத்தியமாக உள்ள ஏழுவங்கோட்டைத் தாலூகா அமராவதி கிராமத்தில் உள்ள அம்பினி ஊருணி மேல்கரையில் யாதொரு பாத்தியமும் எவ்வித அனுபவமும் எந்தக் காலத்திலும் இல்லாத இந்த நம்பர் ௧, ௨ பிரதிவாதிகள் ஷி கிராமக்குடிகள் ஒத்தாசையைக்கொண்டு பிள்ளையார் கோவிலுக்கு என்றும் பெலி பீடத்துக்காக என்றும் அக்கிரமமாக கட்டிடம் கட்டி வருவதில் தாவா இடத்தை வரப் பத்தவும் மற்ற பரிகாறங்கள் பெறவும் ஷி அமராவதி கிராமத்தில் உள்ள எல்லா குடிகளையும் கக்ஷிக்காரர்களாகச் சேர்த்து மேல் நடத்துவதில் ஏற்படக் கூடிய தாமதம் வகையறா அசௌகரியங்களை உத்தேசித்து ஷி நம்பர் ௩ முதல் ௧௨ வரை பிரதிவாதிகளை அமராவதி கிராமம் மற்ற குடிகளுக்கு ரிப்ரசண்டேடிவ் முறைமையிலும் சேர்த்து பிராதை மேல் நடத்த சி. பு. கோ. ஆர்டர் ௧. ரூல் ௮-ன் படி மனுக் கொடுத்து ஆர்டராகி இருக்கிறது. இந்தநம்பர் ௹-௯-௨௩ல் வாயிதா ஏற்பட்டிருப்பதால் ஷிகிராமம் குடிகள்எவரும் இதில்பிரதிவாதிகளாக சேர்ந்து கொள்ளலாம்.

| | |
|---|---|
| தேவகோட்டை ௧௨-௮-௨௩ | பி. ராமசுவாமி அய்யர் வாதி வக்கீல், |

ராய. சொக்கலிங்கத்தால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில் அச்சியற்றிப் பிரசுரம் செய்யப்பெற்றது.

